உ
*சிவமயம்*

உரமன் னுயர்கோட் டுலறுகூகை யலறுமயான த்தில்
இரவிற்பூதம் பாடஆடி யெழிலாரலர்மேஜலப்
பிரமன்றஜலயி னறவமேற்ற பெம்மானெமையாளும்
பரமன்பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. ச

குலவெஞ்சிஜலயான் மதில்மூன்றெரித்த கொல்லேறுடையண்ணல்
கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற்காவேரி
நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெதிருந்திப்
பலவின்கனிகள் திரைமுன்சேர்க்கும் பழனநகராரே. ரு

வீஜளக்குரலும் விளிசங்கொலியும் விழவினொலியோவா
மூஜளத்தஜலகொண் டடியாரேத்தப் பொடியாமதிளெய்தார்
ஈஜளப்படுகி லிஜலயார்தெங்கிற் குஜலயார்வாழையின்
பாஜளக்கமுகின் பழம்வீழ்சோஜலப் பழனநகராரே. சா

பொய்யாமொழியார் முறையாலேத்திப் புகழ்வார்திருமேனி
செய்யார்கரிய மிடற்றுர்வெண்ணூல் சேர்ந்தஅகலத்தார்
கையாடலினுர் புனலான்மல்கு சடைமேற்பிறையோடும்
பையாடரவ முடனேவைத்தார் பழனநகராரே. எ

மஞ்சோங்குயர முடையான்மஜலயை மாருயெடுத்தான்தோள்
அஞ்சோடஞ்சு மாறுநான்கு மடரவூன்றினுர்
நஞ்சார்சுடஜலப் பொடிநீறணிந்த நம்பான்வம்பாரும்
பையாடரவ முடனேவைத்தார் பழனநகராரே. அ

கடியார்கொன்றைச் சுரும்பின்மாஜல கமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந்தாவிய
நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காணுத
படியார்பொடியா டகலமுடையார் பழனநகராரே. கூ

கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக்கஞ்சியை
உண்டாங்கவர்க ளுரைக்குஞ்சிறுசொல் லோரார்பாராட்ட
வண்டாமரையின் மலர்மேல்நறவ மதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழனநகராரே. ௰

வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணுபுரத்தன் னுள்
நாவுய்த்தனைய திறலால்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான்பழனத்தை
வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார்நல்லாரே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 16. விசாகம் : திருஆரூர்
## பண் : குறிஞ்சி

*திருச்சிற்றம்பலம்*

சித்தந் தெளிவீர்காள், அத்த னாரூரைப்
பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே. ௧

பிறவி யறுப்பீர்காள், அறவ னாரூரை
மறவா தேத்துமின், துறவி யாகுமே. ௨

துன்பந் துடைப்பீர்காள், அன்ப னணியாரூர்
நன்பொன் மலர்தூவ, இன்ப மாகுமே. ௩

உய்ய லுறுவீர்காள் ஐய னாரூரைக்
கையி னாற்றொழ, நையும் வினைதானே. ௪

பிண்ட மறுப்பீர்காள், அண்ட னாரூரைக்
கண்டு மலர்தூவ, விண்டு வினைபோமே. ௫

பாச மறுப்பீர்காள், ஈச னணியாரூர்
வாச மலர்தூவ, நேச மாகுமே. ௬

வெய்ய வினைதீர, ஐய னணியாரூர்
செய்ய மலர்தூவ, வைய முமதாமே. ௭

அரக்க னாண்மையை, நெருக்கி னானாரூர்
கரத்தி னாற்றொழத், திருத்த மாகுமே. ௮

துள்ளு மிருவர்க்கும், வள்ள லாரூரை
உள்ளு மவர்தம்மேல், விள்ளும் வினைதானே. ௯

கடுக்கொள் சீவரை, அடக்கி ஞனூர்
எடுத்து வாழ்த்துவார், விடுப்பர் வேட்கையே. ௰

சீரூர் சம்பந்தன், ஆரூ ரைச்சொன்ன
பாரூர் பாடலார், பேரா ரின்பமே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 17. அனுஷம் : திருச்சோற்றுத்துறை
## பண் : தக்கராகம்

*திருச்சிற்றம்பலம்*

செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னு தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமா னொளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௧

பாலு நெய்யுந் தயிரும் பயின்றாடித்
தோலு நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்சை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௨

செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயஎம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௩

பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௪

பிறையு மரவும் புனலுஞ் சடைவைத்து
மறையு மோதி மயான மிடமாக
உறையுஞ் செல்வ முடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௫

உ
*சிவமயம்*

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா டரங்காப்
படிகொள் பாணி பாடல் பயின்ருடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௬

சாடிக் காலன் மாளத் தஉலமாஉல
சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. ௭

பெண்ணேர் பாக முடையார் பிறைச்சென்னிக்
கண்ணேர் பாகங் கலந்த நுதலினர்
எண்ணு தரக்க னெடுக்க வூன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௮

தொழுவா ரிருவர் துயர நீங்கவே
அழலா யோங்கி யருள்கள் செய்தவன்
விழவார் மருகில் விதியால் மிக்களம்
எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. ௯

கோது சாற்றித் திரிவா ரமணகுண்டர்
ஓது மோத்தை யுணரா தெழுநெஞ்சே
நீதி நின்று நிஉனவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. ௰

அந்தண் சோற்றுத் துறையெம் மாதியைச்
சிந்தை செய்ம்மி னடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புஉனதல் வழிபாடே. ௰௧

திருச்சிற்றம்பலம்

உ

*சிவமயம்*

# 18. கேட்டை : திருவேதிகுடி : திருவிராகம்
## பண் : சாதாரி

*திருச்சிற்றம்பலம்*

நீறுவரி யாடரவொ டாமைமன என்புநிரை பூண்பரிடபம்
ஏறுவரி யாவரு மிறைஞ்சுகழ லாதிய ரிருந்த விடமாம்
தாறுவிரி பூகமலி வாழைவிரை நாறவிணை வாளைமடுவில்
வேறுபிரி யாதுவிளை யாடவள மாரும்வயல் வேதிகுடியே. க

சொற்பிரிவி லாதமறை பாடிநட மாடுவர்தொ லானையுரிவை
மற்புரிபு யத்தினிது மேவுவரெந்நாளும் வளர்வானவர் தொழத்
துற்பரிய நஞ்சமுத மாகமு னயின்றவரி யன்றதொகுசீர்
வெற்பரையன மங்கையொரு பங்கர்நக ரென்பர்திரு வேதிகுடியே. உ

போழுமதி பூணரவு கொன்றைமலர் துன்றுசடை வென்றிபுக மேல்
வாழுநதி தாழுமரு ளாளரிரு ளார்மிடறர் மாதரிமையோர்
சூழுமிர வாளர்திரு மார்பில்விரி நூலர்வரி தோலருடை மேல்
வேழவுரி போர்வையினர் மேவுபதி யென்பர் திருவேதிகுடியே. ௩

காடர்கரி காலர்கனல் கையரனல் மெய்யருடல் செய்யர்செவியில்
தோடர்தெரி கீளர்சரி கோவணவ ராவணவர் தொல்லை நகர்தான்
பாடலுடை யார்களடி யார்கள்மல ரோடுபுனல் கொண்டுபணிவார்
வேடமொளி யானபொடி பூசியிசை மேவுதிரு வேதிகுடியே. ௪

சொக்கர்துணை மிக்கவெயி லுக்கறமுனிந்து தொழுமூவர் மகிழத்
தக்கவருள் பக்கமுற வைத்தஅர னரினிது தங்குநகர் தான்
கொக்கரவ முற்றபொழில் வெற்றிநிழல் பற்றிவரி வண்டிசைகுலாம்
மிக்கமரர் மெச்சியினி தச்சமிடர் போகநல்கு வேதி குடியே. ரு

செய்யதிரு மேனிமிசைவெண்பொடிய ணிந்துகருமா னுரிவைபோர்த்
தையமிடு மென்றுமட மங்கையொட கந்திரியு மண்ணலிடமாம்
வையம்விலை மாறிடினு மேறுபுகழ் மிக்கழிவி லாதவகையார்
வெய்யமொழி தண்புலவ ருக்குரைசெ யாதஅவர் வேதிகுடியே. சா

உன்னியிரு போதுமடி பேணுமடிய ார்தமிட ரொல்க அருளித்
துன்னியொரு நால்வருட னுல்நிழலி ருந்ததுஊண வன்றனிடமாம்
கன்னியரொ டாடவர்கள் மாமணம்வி ரும்பியரு மங்கலமிக
மின்னியலு நுண்ணிடைநன் மங்கையரியற்றுபதி வேதிகுடியே. எ

உரக்கரநெ ருப்பெழநெ ருக்கிவரை பற்றியவொ ருத்தன்முடிதோள்
அரக்கஊனய டர்த்தவ னிசைக்கினிது நல்கியரு ளங்கணனிடம்
முருக்கிதழ்ம டக்கொடிம டந்தையரு மாடவரு மொய்த்தகலவை
விரைக்குழல்மி கக்கமழ விண்ணிசையு லாவுதிரு வேதிகுடியே. அ

பூவின்மிசை யந்தணனெ டாழிபொலி யங்கையனு நேடஎரியாய்த்
தேவுமிவ ரல்லரினி யாவரென நின்றுதிகழ் கின்றவரிடம்
பாவலர்க ளோசையியல் கேள்வியத ருதகொடை யாளர்பயில்வாம்
மேவரிய செல்வநெடு மாடம்வளர் வீதிநிகழ்திரு வேதிகுடியே. கூ

வஞ்சமணர் தேரர்மதி கேடர்தம னத்தறிவி லாதவர்மொழி
தஞ்சமென என்றுமுண ராத அடியார்கருது சைவனிடமாம்
அஞ்சுபுலன் வென்றறுவ கைப்பொருள் தெரிந்தெழு இசைக்கிளவியால்
வெஞ்சின மொழித்தவர்கள் மேவி நிகழ்கின்ற திரு வேதிகுடியே. ۱௦

கந்தமலி தண்பொழில்நன் மாடமிடை காழிவளர் ஞானமுணர்சம்
பந்தன்மலி செந்தமிழின் மாஊலகொடு வேதிகுடி யாதிகழலே
சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்க ளென்ன நிகழ் வெய்தியிமையோர்
அந்தவுல கெய்தியரசாளுமது வேசரத மாஊண நமதே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 19. மூலம் : திருக்கண்டியூர் வீரட்டம்
## பண் : கொல்–

*திருச்சிற்றம்பலம்*

வினவினேனறி யானமயில்லுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர்,
கஊனவிலார் புனற் காவிரிக்கரை மேயகண்டியூர் வீரட்டன்,
தனமுனே தனக்கின்மையோ தம ராயினாரண்ட மாளத்தான்,
வனனில் வாழ்க்கை கொண்டாடிப் பாடியிவ் வையமாப்பலி தேர்ந்ததே. க

உ
*சிவமயம்*

உள்ளவாறெனக் குரைசெய்மின்னுயர் வாயமாதவம் பேணுவீர்,
கள்ளவிழ் பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத் துறை காதலான்,
பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை வைத்தும் பெரு நீரொலி,
வெள்ளந்தாங்கிய தென்கொலோ மிகுமங்கையாளுட னுகவே. உ

அடியராயினீர் சொல்லுமின்னறி கின்றிலேன்னரன் செய்கையைப்
படியெலாஞ்தொழு தேத்துகண்டியூர் வீரட்டத்துறை பான்மையான்,
முடிவுமாய் முதலா யிவ்வைய முழுதுமாயழ காயதோர்,
பொடியதார் திரு மார்பினிற்புரி நூலும் பூண்டெழு பொற்பதே. ௩

பழையதொண்டர்கள் பகருமின்பல வாயவேதியன் பான்மையைக்,
கழையுலாம்புனல் மல்கு காவிரி மன்னுகண்டியூர் விரட்டன்,
குழையொர் காதினிற் பெய்துகற்தொரு குன்றின் மங்கை வெருவுறப்,
புழைநெடுங்கைநன் மாவுரித்தது போர்த்துகந்த பொலிவதே. ச

விரவிலாதுமைக் கேட்கின்றேனடி விரும்பியாட்செய்வீர் விளம்புமின்,
கரையெலாந்திரை மண்டுகாவிரிக் கண்டியூருறை வீரட்டன்,
முரவமொந்தை முழா வொலிக்க முழங்கு பேயொடுங் கூடிப்போய்ப்,
பரவுவானவர்க் காகவார்கடல் நஞ்சமுண்ட பரிசதே. ரு

இயலுமாறெனக் கியம்புமின்னிறை வன்னுமாய் நிறைசெய்கையைக்,
கயல்நெடுங் கண்ணினூர்கள் தாம் பொலி கண்டியூருறை வீரட்டன்,
புயல்பொழிந்திழி வானுளோர் களுக்காகவன் றயன் பொய்ச்சிரம்,
அயனகவவ் தரிந்துமற்றதி லூணுகந்த வருத்தியே. சா

திருந்து தொண்டர்கள் செப்புமின்மிகச் செல்வன்றன்னது திறமெலாம்,
கருந்தடங் கண்ணினூர்கள் தாந்தொழு கண்டியூருறை வீரட்டன்,
இருந்து நால்வரொ டால் நிழலற முரைத்ததும்மிகு வெம்மையார்,
வருந்தவன் சிறை யாலம் மாமதில் மூன்று மாட்டியவண்ணமே. எ

நாவிரித்தான் தொல்புகழ்பல பேணுவீரிறை நல்குமின்,
காவிரித்தடம் புனல்செய்கண்டியூர் வீரட்டத்துறை கண்ணுதல்,
கோவிரிப்பயன் ஆனஞ்சாடிய கொள்கையுங் கொடிவரைபெற,
மாவரைத்தலத் தாலரக்கனை வலியைவாட்டிய மாண்பதே. அ

பெருமையேசர ணுகவாழ்வுறு மாந்தர்காளிறை பேசுமின்
கருமையார் பொழில் சூழந்தண் வயற் கண்டியூருறை வீரட்டன்
ஒருமையாலுயர் மாலுமற்றை மலரவன்னுணர்ந் தேத்தவே
அருமையாலவ ருக்குயர்ந்தெரி யாகி நின்ற அத்தன்மையே. ௯

நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள் நவிலுமின்னுமைக் கேட்கின்றேன்,
கமரழிவயல் சூழுந்தண்புறை கண்டியூருறை வீரட்டன்,
தமரழித்தெழு சாக்கியச்சம ணுதரோது மதுகொளா,
தமரரானவ ரேத்த அந்தகன் தன்னைச் சூலத்தி லாய்ந்ததே. ௰

கருத்தனைப் பொழில் குழுங்கண்டியூர் விரட்டத்துறைகள்வனை
அருத்த னைத்திற மடியார்பால்மிகக் கேட்டுகந்த விறுவுரை
திருத்த மாந்திகழ் காழிஞானசம் பந்தன் செப்பிய செந்தமிழ்
ஒருத்தராகி லும் பலர்களாகி லுமுரை செய்வாருயர்ந்தார்களே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 20. பூராடம் : திருப்பூந்துருத்தி : திருவிருத்தம்
## பண் : திருக்குறுந்தொகை

*திருச்சிற்றம்பலம்*

மாலினை மாலுறநின்ருன் மலைமக டன்னுடைய
பாலினைப் பான்மதி சூடியைப் பண்புண ரார்மதின்மேல்
போலனைப் போர்விடை யேறியைப் பூந்துருத் திம்மகிழும்
ஆலனை யாதிபு ராணனை நாமடி போற்றுவதே. ௧

மறியுடை யான்மழு வாளினன் மாமலை மங்கையொர்பால்
குறியுடை யான்குண மொன்றறிந் தாரில்லை கூறிலவன்
பொறியுடை வாளர வத்தவன் பூந்துருத் திய்யுறையும்
அறிவுடை யாதிபு ராணனை நாமடி போற்றுவதே. ௨

மறுத்தவர் மும்மதின் மாயவொர் வெஞ்சிலை கோத்தொரம்பால்
அறுத்தனை யாலதன் கீழனை யால்விட முண்டதனைப்
பொறுத்தனைப் பூதப் படையினைப் பூந்துருத் திய்யுறையும்
நிறுத்தனை நீல மிடற்றனை யானடி போற்றுவதே. ௩

உ
*சிவமயம்*

உருவினை யூழி முதல்வனை யோதி நிறைந்துநின்ற
திருவினைத் தேசம் படைத்தனைச் சென்றடைந் தேனுடைய
பொருவினை யெல்லாந் துரந்தனைப் பூந்துருத் திய்யுறையும்
கருவினைக் கண்மூன் றுடையனை யானடி போற்றுவதே. ச

தக்கன்றன் வேள்வி தகர்த்தவன் சார மதுவன் றுகோள்
மிக்கன மும்மதில் வீயவொர் வெஞ்சிலை கோத்தொரம்பால்
புக்கனன் பொன்றிகழ்ந் தன்னதொர் பூந்துருத் திய்யுறையும்
நக்கனை நங்கள்பி ரான்றனை நானடி போற்றுவதே. ரு

அருகடை மாலையுந் தானுடை யானழ காலமைந்த
உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் திய்யுறையும்
திருவுடைத் தேச மதியனை யானடி போற்றுவதே. சா

மன்றியுந் நின்ற மதிலரை மாய வகை கெடுக்கக்
கன்றியுந் நின்று கடுஞ்சிலை வாங்கிக் கனலம்பினால்
பொன்றியும் போகப் புரட்டினன் பூந்துருத் திய்யுறையும்
அன்றியுஞ் செய்தபி ரான்றனை யானடி போற்றுவதே. எ

மின்னிற மிக்க விடையுமை நங்கையொர் பான்மகிழ்ந்தான்
என்னிற மென்றமரர் பெரியா ரின்னந் தாமறியார்
பொன்னிற மிக்க சடையவன் பூந்துருத் திய்யுறையும்
என்னிற வெந்தைபி ரான்றனை யானடி போற்றுவதே. அ

அந்தியை நல்ல மதியினை யார்க்கு மறிவரிய
செந்தியை வாட்டுஞ் செம்பொன் னினைச்சென் றடைந்தேனுடைய
புந்தியைப் புக்க வறிவினைப் பூந்துருத் திய்யுறையும்
நந்தியை நங்கள்பி ரான்றனை நானடி போற்றுவதே . கூ

பைக்கையும் பாந்தி விழிக்கையும் பாம்பு சடையிடையே
வைக்கையும் வானிழி கங்கையு மங்கை நடுக்குறவே
மொய்க்கை யரக்கனை யூன்றினன் பூந்துருத் திய்யுறையும்
மிக்கநல் வேத விகிர்தனை நானடி போற்றுவதே. ப

உ

*சிவமயம்*

திருச்சிற்றம்பலம்

## 21. உத்திராடம் : திருப்புள்ளிருக்கு வேளூர்
## பண் : சீகாமரம்

*திருச்சிற்றம்பலம்*

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே. ௧

தையலா ளொருபாகஞ் சடைமேலா ளவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோ ரந்தணனா ருறையுமிடம்
மெய்சொல்லா இராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே. ௨

வாசநலஞ் செய்திமையோர் நாள்தோறும் மலர்தூவ
ஈசனெம் பெரிமானா ரினிதாக வுறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங்கொருநாளு மொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. ௩

மாகாயம் பெரியதொரு மானுரிதோ லுடையாடை
ஏகாய மிட்டுகந்த எரியாடி யுறையுமிடம்
ஆகாயந் தேரோடும் இராவணனை யமரின்கண்
போகாமமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. ௪

கீதத்தை மிகப்பாடு மடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே. ௫

திறங்கொண்ட அடியார்மேல் தீவினைநோய் வாராமே
அறங்கொண்டு சிவதன்ம முரைத்தபிரா னமருமிடம்
மறங்கொண்டங் கிராவணன்றன் வலிகருதி வந்தனைப்
புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. ௬

உ
*சிவமயம்*

அத்தியினீ ருரிமூடி யழகாக அனலேந்திப்
பித்தரைப்போற் பலிதிரியும் பெருமானுர் பேணுமிடம்
பத்தியினுல் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து
புத்தியொன்ற வைத்துகந்தான் புள்ளிருக்கு வேளூரே . எ

பண்ணொன்ற இசைபாடு மடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாழ்நாள துடையானைப்
புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே . அ

வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்
சாதித்த வில்லாளி கண்ணுளன் சாருமிடம்
ஆதித்தன் மகனென்ன அகன்ஞாலத் தவரோடும்
போதித்த சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. கூ

கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் ருடாமே
தடுத்தவரெம் பெருமானுர் தாமினிதா யுறையுமிடம்
விடைத்துவரு மிலங்கைக்கோன் மலங்கச்சென் றிராமற்காய்ப்
புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. ௰

செடியாய வுடல்தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன் சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையாம் மறுபிறப்பே. ௰க

திருச்சிற்றம்பலம்

## 22. திருவோணம் : திருநெய்த்தானம்
## பண் : நட்டபாடை

*திருச்சிற்றம்பலம்*

மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடிய வொருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவ ளோடும்
நெய்யாடிய பெருமானிட நெய்த்தானமெ னீரே. க

உ
*சிவமயம்*

பறையும்பழி பாவம்படு துயரம்பல தீரும்
பிறையும்புன லரவும்படு சடையெம்பெரு மானூர்
அறையும்புனல் வருகாவிரி யலைசேர்வட கரைமேல்
நிறையும்புனை மடவார்ப்பயில் நெய்த்தானமெ னீரே. உ

பேயாயின பாடப்பெரு நடமாடிய பெருமான்
வேயாயின தோளிக்கொரு பாகம்மிக வுடையான்
தாயாகிய வுலகங்களை நிலைபேறுசெய் தலைவன்
நேயாடிய பெருமானிட நெய்த்தானமெ னீரே. ௩

சுடுநீறணி யண்ணற்சுடர் சூலம்மன லேந்தி
நடுநள்ளிருள் நடமாடிய நம்பன்னுறை யிடமாம்
கடுவாளிள வரவாடுமிழ் கடல்நஞ்சம துண்டான்
நெடுவாளைகள் குதிகொள்ளுயர் நெய்த்தானமெ னீரே. ௪

நுகராரமொ டேலம்மணி செம்பொன்னுரை யுந்திப்
பகராவரு புனல்காவிரி பரவிப்பணிந் தேத்தும்
நிகரான்மண லிடுதண்கரை நிகழ்வாயநெய்த்தான
நகரானடி யேத்தந்நமை நடலையடை யாவே. ௫

விடையார்கொடி யுடையவ்வணல் வீந்தார்வெளை யெலும்பும்
உடையார்நறு மாலைசடை யுடையாரவர் மேய
புடையேபுனல் பாயும்வயல் பொழில்சூழ்ந்தநெய்த் தானம்
அடையாதவ ரென்றும்மம ருலகம்மடை யாரே. ௬

நிழலார்வயல் கமழ்சோலைகள் நிறைகின்றநெய்த் தானத்
தழலானவ னனலங்கையி லேந்தியழ காய
கழலானடி நாளுங்கழ லாதேவிட லின்றித்
தொழலாரவர் நாளுந்துய ரின்றித்தொழு வாரே. ௭

அறையார்கட லிலங்கைக்கிறை யணிசேர்கயி லாயம்
இறையாரமு னெடுத்தானிரு பதுதோளிற வூன்றி
நிறையார்புனல் நெய்த்தானன்நல் நிகழ்சேவடி பரவக்
கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத்துதல் கதியே. ௮

கோலம்முடி நெடுமாலொடு கொய்தாமரை யானும்
சீலம்மறி வரிதாயொளி திகழ்வாநெய்த் தானம்
காலம்பெற மலர்நீரவை தூவித்தொழு தேத்தும்
ஞாலம்புக ழடியாருட லுறுநோய்நலி யாவே. ௯

மத்தம்மலி சித்தத்திறை மதியில்லவர் சமணர்
புத்தரவர் சொன்னம்மொழி பொருளாநினை யேன்மின்
நித்தம்பயில் நிமலன்னுறை நெய்தானம தேத்தும்
சித்தம்முடை யடியாருடல் செறுநோயடை யாவே. ௰

தலமல்கிய புனற்காழியுள் தமிழ்ஞானசம் பந்தன்
நிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானம தேத்தும்
பலமல்கிய பாடல்லிவை பத்தும்மிக வல்லார்
சிலமல்கிய செல்வன்னடி சேர்வர் சிவகதியே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 23. அவிட்டம் : இராமேச்சுரம்
## பண் : காந்தார பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

திரிதரு மாமணி நாகமாடத் தினைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக் களரி யேந்தியாடு நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்த மிலங்குகான விராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி விமலர் செயுஞ்செயலே. ௧

பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே புரிவோ டுமைபாடத்
தெறிகிள ரப்பெயர்ந் தெல்லியாடுந் திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரு மிராமேச் சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம் மணாளர் செயுஞ்செயலே. ௨

அலைவளர் தண்புனல் வார்சடைமே லடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடஆடி மயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியு மிராமேச்சுர மேயர்
தலைவளர் கோலநன் மாலைசூடுந் தலைவர் செயுஞ் செயலே. ௩

உ
*சிவமயம்*

மாதன நேரிழை யோர்தடங்கண் மலையான் மகள்பாடத்
தேதெரி யங்கையி லேந்தியாடுந் திறமே தெரிந்துணர்வார்
ஏதமி லார்தொழு தேத்திவாழ்த்து மிராமேச் சுரமேயார்
போதுவெண் திங்கள்பைங் கொன்றைசூடும் புனிதர் செயுஞ் செயலே. ச

சூலமோ டொண்மழு நின்றிலங்கச் சுடுகா டிடமாகக்
கோலநன் மாதுடன் பாடஆடுங் குணமே குறித்துணர்வார்
ஏல நறும்பொழில் வண்டுபாடு மிராமேச் சுரமேய
நீலமார் கண்டமுடையவெங்கள் நிமலர் செயுஞ் செயலே. ரு

கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக் காமனைக் காய்ந்தவர் தாம்
இணைபிணை நோக்கிநல் லாளொடாடு மியல்பின ராகிநல்ல
இணைமலர் மேலன்னம் வைகுகான லிராமேச் சுரமேய
அணைபிணை புல்கு கரந்தைசூடு மடிகள் செயுஞ் செயலே. சா

நீரிஞர் புன்சடை பின்புதாழ நெடுவெண் மதிசூடி
ஊரிஞர் துஞ்சிருள் பாடியாடு முவகை தெரிந்துணர் வார்
ஏரிஞர் பைம்பொழில் வண்டுபாடு மிராமேச் சுரமேய
காரிஞர் கொன்றைவெண் திங்கள் சூடுங் கடவுள் செயுஞ் செயலே. எ

பொன்திகழ் சுண்ணவெண் ணீறுபூசிப் புலித்தோ லுடையாக
மின்திகழ் சோதியர் பாடலாடல் மிக்கார் வருமாட்சி
என்றுநல் லோர்கள் பரவியேத்து மிராமேச் சுரமேயார்
குன்றினு லன்றரக் கன்தடந்தோ ளடர்த்தார் கொளுங் கொள்கையே. அ

கோவலன் நான்முகன் நோக்கொணுத குழக னழகாய
மேவல னெள்ளெரி யேந்தியாடு மிமையோ ரிறைமெய்ம்மை
ஏவல னுர்புகழ்ந் தேத்திவாழ்த்து மிராமேச் சுரமேய
சேவல வெல்கொடி யேந்துகொள்கையெம் மிறைவர் செயுஞ்செயலே. கூ

பின்னெடு முன்னிடு தட்டைச்சாத்திப் பிரட்டேதிரி வாரும்
பொன்னெடுஞ் சீவரப் போர்வையார்கள் புறங்கூறல் கேளாதே
இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலு மிராமேச்சுர மேய
பன்னெடு வெண்டலை கொண்டு ழலும் பரமர் செயுஞ் செயலே. ம

உ
*சிவமயம்*

தேவியை வவ்விய தென்னிலங்கை யரையன் திறல் வாட்டி
ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணு மிராமேச் சுரத்தாரை
நாவியன் ஞானசம் பந்தன்நல்ல மொழியால் நவின்றேத்தும்
பாவியன் மாலை வல்லாரவர்தம் வினையாயின பற்றறுமே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 24. சதயம் : திருக்குறுந்தொகை 5ஆம் திருமுறை
## சரம் : திருக்கடம்பந்துறை

*திருச்சிற்றம்பலம்*

முற்றிலாமுலை யாளிவ ளாகிலும்
அற்றம் தீர்க்கும் அறிவில ளாகிலும்
கற்றைச் செஞ்சடை யான்கடம் பந்துறைப்
பெற்றம் ஊர்தியென் றள்ளங்கள் பேதையே. ௧

தனகி ருந்ததொர் தன்மைய ராகிலும்
முனகு தீரத் தொழுதெழு மின்களோ
கனகப் புன்சடை யான்கடம் பந்துறை
நினைய வல்லவர் நீள்விசும் பாள்வரே. ௨

ஆரி யந்தமி ழோடிசை யானவன்
கூரி யகுணத் தார்குறி நின்றவன்
காரி கையுடை யான்கடம் பந்துறைச்
சீரி யல்பத்தர் சென்றடை மின்களே. ௩

பண்ணின் இன்மொழி கேட்கும் பரமனை
வண்ண நன்மல ரான்பல தேவரும்
கண்ண னும்மறி யான்கடம் பந்துறை
நண்ண நம்வினை யாயின நாசமே. ௪

மறைகொண் டம்மனத் தானைம னத்துளே
நிறைகொண் டநெஞ்சி னுள்ளுற வைம்மினோ
கறைகண்டன் னுறை யுங்கடம் பந்துறை
சிறைகொண் டவ்வினை தீரத் தொழுமினே. ௫

உ
*சிவமயம்*

நங்கை பாகம்வைத்த நறுஞ் சோதியைப்
பங்க மின்றிப் பணிந்தெழு மின்களோ
கங்கைச் செஞ்சடையான் கடம்பந்துறை
அங்க மோதி அரனுறை கின்றதே. சு

அரிய நான்மறை ஆறங்கமாய் ஐந்து
புரியன் தேவர்கள் ஏத்தநஞ் சுண்டவன்
கரிய கண்டத்தி னன் கடம்பந்துறை
உரிய வாறு நினைமட நெஞ்சமே. எ

பூமென் கோதை உமையொரு பாகனை
ஓமஞ் செய்தும் உணர்மின் கள்உள்ளத்தால்
காமற் காய்ந்தபிரான்கடம் பந்துறை
நாமம் ஏத்தநம் தீவினை நாசமே. அ

பார ணங்கி வணங்கிப் பணிசெய
நார ணன்பிர மன்னறி யாததோர்
காரணன் கடம் பந்துறை மேவிய
ஆரணங் கொரு பாலுடை மைந்தனே. கூ

நூலால் நன்றுய் நினைமின்கள் நோய்கெடப்
பாலான் ஐந்துடன் ஆடும் பரமனுர்
காலான் ஊன்றுகந் தான்கடம்பந்துறை
மேலா னுஞ்செய்த வல்வினை விடுமே . ம

திருச்சிற்றம்பலம்

## 25. பூரட்டாதி : திருக்கேதீச்சுரம்
## பண் : நட்டராகம்

*திருச்சிற்றம்பலம்*

விருது குன்றமா மேருவில் நாணரவாஅன லெரியம்பாப்
பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளும்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டம்
கருத நின்றகே தீச்சரங்கைதொழக் கடுவினையடையாவே. க

பாடல் வீணையர் பலபல சரிதைய ரெருதுகைத் தருநட்டம்
ஆடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ் சுண்டிருள் கண்டத்தர்
ஈட மாவது இருங்கடற் கரையினி லெழில்திகழ் மாதோட்டம்
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக் கெடுமிடர்வினைதானே. உ

பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையினறை கழல்சிலம்பார்க்கச்
சுண்ண மாதரித் தாடுவர் படுவரகந்தொறு மிடுபிச்சைக்
குண்ண லாவதோ ரிச்சையினுழல்பவருயர் தருமாதோட்டத்
தண்ணல் நண்ணுகே தீச்சர மடைபவர்க் கருவினையடையாவே. ௩

பொடிகொள் மேனியர் புலியத ளரையினர் விரிதரு கரத்தேந்தும்
வடிகொள் மூவிலை வேலினர் நூலினர் மறிகடல் மாதோட்டத்
தடிகளாதரித் திருந்தகே தீச்சரம் பரிந்தசிந் தையராகி
முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம் மேல்மொய்த்தெழும் வினைபோமே. ச

நல்லராற்றவும் ஞானநன் குடையர்தம் மடைந்தவர்க் கருளீய
வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர் மலிகடன் மாதோட்டத்
தெல்லையில்புக ழெந்தைகே தீச்சர மிராப்பகல் நினைந்தேத்தி
அல்ல லாசறுத் தரனடி யிணைதொழு மன்பரா மடியாரே. ரு

பேழை வார்சடைப் பெருந்திரு மகள்தனைப் பொருந்த வைத்தொருபாகம்
மாழை யங்கயற் கண்ணிபா லருளிய பொருளினர் குடிவாழ்க்கை
வாழை யம்பொழில் மந்திகள் களிப்புற மருவிய மாதோட்டக்
கேழல் வெண்மருப் பணிந்த நீள் மார்பர்கே தீச்சரம் பிரியாரே. சா

பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல் லுலகினி லுயிர் வாழ்க்கை
கண்ட நாதனர் கடலிடங் கைதொழக் காதலித் துறைகோயில்
வண்டு பண்செயு மாமலர்ப் பொழில்மஞ்ஞை நடமிடு மாதோட்டம்
தொண்டர் நாள்தொறுந்துதிசெய அருள்செய்கே தீச்சர மதுதானே. எ

தென்னி லங்கையர் குலபதிமலைநலிந் தெடுத்தவன் முடிதிண்டோள்
தன்ன லங்கெட அடர்த்தவற் கருள்செய்த தலைவனர் கடல்வாயப்
பொன்னி லங்கிய முத்துமா மணிகளும் பொருந்திய மாதோட்டத்
துன்னி யன்பொடு மடியவரிறைஞ்சுகே தீச்சரத் துள்ளாரே. அ

பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும் புவியிடந் தெழுந்தோடி
மேவி நாடிநின் னடியிணை காண்கிலாவித்தக மென்னுகும்
மாவும் பூகமுங் கதலியும் நெருங்குமா தோட்டநன் னகர்மன்னித்
தேவி தன்னெடுந் திருந்துகே தீச்சரத் திருந்தளம் பெருமானே. ௯

புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர் புறனுரைச்சமணுதர்
எத்த ராகிநின்றுண்பவ ரியம்பிய யேழைமை கேளேன்மின்
மத்த யானையை மறுகிட வுரிசெய்து போர்த்தவர் மாதோட்டத்
தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே தீச்சர மடைமின்னே. ௰

மாடெ லாமண முரசெனக் கடலின தொலிகவர் மாதோட்டத்
தாடலேறுடை யண்ணல்கே தீச்சரத் தடிகளை யணிகாழி
நாடுளார்க்கிறை ஞானசம் பந்தன்சொல் நவின்றெழு பாமாலைப்
பாட லாயின பாடுமின் பத்தர்கள் பரகதி பெறலாமே. ௰௧

திருச்சிற்றம்பலம்

## 26. உத்திரட்டாதி : திருக்குறுந்தொகை
## திறம் : திருவாட்போக்கி

*திருச்சிற்றம்பலம்*

கால பாசம் பிடித்தெழு தூதுவர்
பால கர்விருத் தர்பழை யாரெனுர்
ஆல நிழல் அமர்ந்தவாட் போக்கியார்
சில மார்ந்தவர் செம்மையுள் நிற்பரே. ௧

விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனிலை பாவிகாள்
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே. ௨

வந்திவ் வாறு வளைத் தெழு தூதுவர்
உந்தியோடி நரகத் திடாமுனம்
அந்தியின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே. ௩

உ

*சிவமயம்*

கூற்றம் வந்து குமைத்திடும் போதினுல்
தேற்றம் வந்து தெளிவுற லாகுமே
ஆற்ற வும்மருள் செய்யும் வாட்போக்கிபால்
ஏற்று மின்விளக் கையிருள் நீங்கவே. ச

மாறு கொண்டு வளைத்தெழு தூதுவர்
வேறு வேறு படுப்பதன் முன்னமே
ஆறு செஞ்சடை வைத்தவாட்போக்கியார்க்
கூறி யூறி யுருகுமென் னுள்ளமே. ரு

கான மோடிக் கடிதெழு தூதுவர்
தான மோடு தஐலபிடி யாமுனம்
ஆனஞ் சாடி யுகந்தவாட் போக்கியார்
ஊன மில்லவர்க் குண்மையில் நிற்பரே. சா

பார்த்துப் பாசம் பிடித்தெழு தூதுவர்
கூர்த்த வேலாற் குமைப்பதன் முன்னமே
ஆர்த்த கங்கை யடக்கும் வாட்போக்கியார்
கீர்த்தி மைகள் கிளர்ந்துரை மின்களே. எ

நாடி வந்து நமன்தமர் நல்லிருள்
கூடி வந்து குமைப்பதன் முன்னமே
ஆடல் பாடல் உகந்தவாட் போக்கியை
வாடி யேத்தநம் வாட்டந் தவிருமே. அ

கட்ட றுத்துக் கடிதெழு தூதுவர்
பொட்ட நூக்கிப் புறப்படா முன்னமே
அட்ட மாமலர் சூடும்வாட் போக்கியார்க்
கிட்ட மாகி இஊணயடி யேத்துமே. கூ

இரக்க முன்னறி யாதெழு தூதுவர்
பரக்க ழித்தவர் பற்றுதன் முன்னமே
அரக்க னுக்கருள் செய்தவாட் போக்கியார்
கரப்ப துங்கரப் பாரவர் தங்கட்கே. ௰

திருச்சிற்றம்பலம்

உ
*சிவமயம்*

# 27. ரேவதி : திருஈங்கோய்மலை
## உபயம் பண் : தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

வானத்துயர்தண் மதிதோய்சடைமேல் மத்தமலர்சூடித்
தேனொத்தனமென் மொழிமான்விழியாள் தேவிபாகமாக்
கானத்திரவி லெரிகொண்டாடுங் கடவுளுலகேத்த
ஏனத்திரள்வந் திழியுஞ்சார லீங்கோய்மலையாரே. க

சூலப்படையொன் றேந்தியிரவிற் சுடுகாடிடமாகக்
கோலச்சடைகள் தாழக்குழல்யாழ் மொந்தைகொட்டவே
பாலொத்தனைய மொழியாள்காண ஆடும்பரமனார்
ஏலத்தொடுநல் லிலவங்கமழு மீங்கோய்மலையாரே. உ

கண்கொள்நுதலார் கறைகொள்மிடற்றார் கரியினுரிதோலார்
விண்கொள்மதிசேர் சடையார்விடையார் கொடியார்வெண்ணீறு
பெண்கொள்திருமார் பதனிற்பூசும் பெம்மானெமையாள்வார்
எண்குமரியுந் திரியுஞ்சார லீங்கோய்மலையாரே. ந

மறையின்னிசையார் நெறிமென்கூந்தல் மலையான்மகளோடும்
குறைவெண்பிறையும் புனலுந்நிலவுங் குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங் கழலுமார்ப்பப் படுகாட்டெரியாடும்
இறைவர்சிறைவண் டறையுஞ்சார லீங்கோய்மலையாரே. ச

நொந்தசுடலைப் பொடிநீறணிவார் நுதல்சேர்கண்ணினார்
கந்தமலர்கள் பலவுந்நிலவு கமழ்புன்சடைதாழப்
பந்தண்விரலாள் பாகமாகப் படுகாட்டெரியாடும்
எந்தம்மடிகள் கடிகொள்சார லீங்கோய்மலையாரே. ரு

நீருரகலை முடையார்நிரையார் கொன்றையரவோடும்
ஆரூர்சடையா ரயில்வெங்கணையா லவுணர்புரமூன்றும்
சீருவெரிசெய் தேவர்பெருமான் செங்கணடல்வெள்ளை
ஏருர்கொடியா ருமையாளோடு மீங்கோய்மலையாரே. சா

உ
*சிவமயம்*

வினையாயினதீர்த் தருளேபுரியும் விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேல் மதியஞ்சூடும் நம்பர்நலமல்கு
தனையார்கமல மலர்மேலுறைவான் தலையோடனலேந்தும்
எனையாளுடையா னுமையாளோடு மீங்கோய்மலையாரே. எ

பரக்கும்பெருமை இலங்கையென்னும் பதியிற்பொலிவாய
அரக்கர்க்கிறைவன் முடியுந்தோளு மணியார்விரல்தன்னால்
நெருக்கியடர்த்து நிமலாபோற்றி யென்றுநின்றேத்த
இரக்கம்புரிந்தா ருமையாளோடு மீங்கோய்மலையாரே. அ

வரியார்புலியி னுரிதோலுடையான் மலையான்மகளோடும்
பிரியாதுடனா யாடல்பேணும் பெம்மான்றிருமேனி
அரியோடயனு மறியாவண்ண மளவில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்த எங்கள்பெருமா னீங்கோய்மலையாரே. கூ

பிண்டியேன்று பெயராநிற்கும் பிணங்குசமணரும்
மண்டைகலனாக் கொண்டுதிரியும் மதியில்தேரரும்
உண்டிவயிறு ருரைகள்கொள்ளா துமையோடுடனாகி
இண்டைச்சடையா னிமையோர்பெருமா னீங்கோய்மலையாரே. ௰

விழவாரொலியு முழவுமோவா வேணுபுரந்தன் னுள்
அழலார்வண்ணத் தடிகளருள்சே ரணிகொள்சம்பந்தன்
எழிலார்சுனையும் பொழிலும்புடைசூ ழீங்கோய்மலையீசன்
கழல்சேர்பாடல் பத்தும்வல்லார் கவலைகளைவாரே. ௰க

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்
அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

| | நட்சத்திரம் 27 | | | | சூக்கும்-ங்கம் ஆகிய வீரட்டம் அ(8), சத்தத்தானம்எ(7), வ-யாதியர் (நவக்கோள்) கூ (9) நவநாயத்தலம் சந்தித்தானம் ௩ (3) |
|---|---|---|---|---|---|
| க | அச்வதி | - | வீரபத்திரன் | - | திருப்பறியல் வீரட்டம் |
| உ | பரணி | - | காகாலன் | - | திருக்கடவூர் வீரட்டம் |
| ௩ | ரோகிணி | - | சலந்தாரி | - | திருவிற்குடி வீரட்டம் |
| ச | திருவாதிரை | - | அந்தகாரி | - | திருக்கோவலூர் வீரட்டம் |
| ரு | பூசம் | - | காமாரி | - | திருக்கொறுக்கை வீரட்டம் |
| சா | ஆயில்யம் | - | கெஜாரி | - | திருப்பழுவூர் வீரட்டம் |
| எ | மகம் | - | புராரி | - | திருவதிகை வீரட்டம் |
| அ | பூரம் | - | வைரவர் | - | திருக்கண்டியூர் வீரட்டம் |
| கூ | அஸ்தம் | - | ஞாயிறு | - | திருவையாறு |
| ய | சுவாதி | - | திங்கள் | - | திருப்பழனம் |
| யக | அநுடம் | - | செவ்வாய் | - | திருச்சோற்றுத்துறை |
| யஉ | கேட்டை | - | புதன் | - | திருவேதிகுடி |
| ய௩ | மூலம் | - | வியாழன் | - | திருக்கண்டியூர் |
| யச | பூராடம் | - | வெள்ளி | - | திருப்பூந்துருத்தி |
| யரு | திருவோணம் | - | சனி | - | திருநெய்த்தானம் |
| யசா | கார்த்திகை | - | ரவி | - | திருத்தில்லை |
| யஎ | மிருகசீரிடம் | - | மதி | - | திருஆலவாய் |
| யஅ | புனர்பூசம் | - | சேய் | - | திருஅண்ணுமலை |
| யகூ | உத்தரம் | - | மால் | - | திருஆனைக்கா |
| உய | சித்திரை | - | பொன் | - | திருப்பெருந்துறை |
| உயக | விசாகம் | - | கவி | - | திருவாரூர் |
| உயஉ | உத்திராடம் | - | காரி | - | திருப்புள்ளிருக்கு வேளூர் |
| உய௩ | அவிட்டம் | - | ராகு | - | திருஇராமேச்சுரம் |
| உயச | பூரட்டாதி | - | கேது | - | திருகேதீச்சுரம் |
| உயரு | சதயம் | - | சரம் | - | திருக்கடம்பர் கோயில் |
| உயசா | உத்திரட்டாதி | - | திரம் | - | திருஜயடிகூர்மலை |
| உயஎ | ரேவதி | - | உபயம் | - | திருஈங்கோய்மலை |

உ
சிவமயம்

## நம் அகத்தில் ஒப்புமைப்படுத்திய நட்சத்திரம் – மூர்த்தி – ஸ்தலம்

| | நம் உறுப்புக்கள் 32 முப்பத்திரண்டும் கூடிய ஒன்று மெய் | நட்சத்திரம் 28 | | சூக்கும்-ங்கம் ஆகிய வீரட்டம் அ(8), சத்தத்தானம்எ(7), வ-யாதியர் (நவக்கோள்) கூ (9) நவநாயத்தலம் சந்தித்தானம் ௩ (3) |
|---|---|---|---|---|
| க. | குழல் | அச்வதி | வீரபத்திரன் | திருப்பறியல் வீரட்டம் |
| உ. | நெற்றி | பரணி | காலகாலன் | திருக்கடவூர் வீரட்டம் |
| ௩. | பிடரி | ரோகிணி | சலந்தாரி | திருவிற்குடி வீரட்டம் |
| ச. | உச்சி | திருவாதிரை | அந்தகாரி | திருக்கோவலூர் வீரட்டம் |
| ரு. | புட்டம் | பூசம் | காமாரி | திருக்கொறுக்கை வீரட்டம் |
| சா. | இடை | ஆயில்யம் | கெஜாரி | திருப்பழூவூர் விரட்டம் |
| எ. | முதுகு | மகம் | புராரி | திருவதிகை வீரட்டம் |
| அ. | பின்தாரை | பூரம் | வைரவர் | திருக்கண்டியூர் வீரட்டம் |
| கூ. | கொப்பூழ் | அஸ்தம் | ஞாயிறு | திருவையாறு |
| ௰. | மேல்வயிறு | சுவாதி | திங்கள் | திருப்பழனம் |
| ௰க. | நெஞ்சு | அநுடம் | செவ்வாய் | திருச்சோற்றுத்துறை |
| ௰உ. | மார்பு | கேட்டை | புதன் | திருவேதிகுடி |
| ௰௩. | குதம் | மூலம் | வியாழன் | திருக்கண்டியூர் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ௰௪. | குய்யம் | - | பூராடம் | - | வெள்ளி | - | திருப்பூந்துருத்தி |
| ௰௫. | உதரம் | - | திருவோணம் | - | சனி | - | திருநெய்த்தானம் |
| ௰௬. | மெய் | - | கார்த்திகை | - | ரவி | - | திருத்தில்லை |
| ௰௭. | புயம் | - | மிருகசீரிடம் | - | மதி | - | திருஆலவாய் |
| ௰௮. | அங்கை | - | புனர்பூசம் | - | சேய் | - | திருஅண்ணுமலை |
| ௰௯. | விரல் | - | உத்தரம் | - | மால் | - | திருஆனைக்கா |
| ௨௰. | கை | - | சித்திரை | - | பொன் | - | திருப்பெருந்துறை |
| ௨௰௧. | தொடை | - | விசாகம் | - | கவி | - | திருவாரூர் |
| ௨௰௨. | பாதம் | - | உத்திராடம் | - | காரி | - | திருப்புள்ளிருக்கு வேளூர் |
| ௨௰௩. | மோவாய் | - | அவிட்டம் | - | ராகு | - | திருஇராமேச்சுரம் |
| ௨௰௪. | விரல் | - | பூரட்டாதி | - | கேது | - | திருகேதீச்சுரம் |
| ௨௰௫. | கபோலம் | - | சதயம் | - | சரம் | - | திருக்கடம்பர் கோயில் |
| ௨௰௬. | குரல்வளை | - | உத்திரட்டாதி | - | திரம் | - | திருஐயடிகூர்மலை |
| ௨௰௭. | கண்டம் | - | ரேவதி | - | உபயம் | - | திருஃங்கோய்மலை |
| ௨௰௮. | மூக்கு | - | | - | புதன் | - | |
| ௨௰௯. | வாய் | - | | - | செவ்வாய் | - | |
| ௩௰. | கண் | - | | - | வெள்ளி | - | |
| ௩௰௧. | காது | - | | - | வியாழன் | - | |
| ௩௰௨. | கால் | - | | - | சனி | - | |
| ௩௰௩. | கடிதடம் | - | அபிஜித் | - | | | |

உ
சிவமயம்
அரி ஓம் நன்ருக குரு வாழ்க குருவே துணை

# இதுவரை வெளியிட்ட நூல்கள்

| வ.எண். | நூலின் பெயர் | | விலை |
|---|---|---|---|
| 1. | கரணஇலக்கணம் | ரூ. | 5.00 |
| 2. | இராமாயண இலக்கியம் | ரூ. | 27.00 |
| 3. | பண்ணிலக்கணச் சூக்கம் | ரூ. | 25.00 |
| 4. | அகத்தியம் | ரூ. | 108.00 |
| 5. | முத்திநெறி இலக்கணம் | ரூ. | 51.00 |
| 6. | இலிங்க புராணம் | ரூ. | 51.00 |
| 7. | பண்செய் கரணம் | ரூ. | 5.00 |
| 8. | இரத்தினச் சுருக்க இராமாயணம் | ரூ. | 21.00 |
| 9. | அண்டஒளி திருமூலர் திருமந்திரம் (சூனிய சம்பாதனை) | ரூ. | 51.00 |
| 10. | கலைஞானம் | ரூ. | 21.00 |
| 11. | திருமுறைப் பெருநூல் விளக்க நான்மறை | ரூ. | 400.00 |
| 12. | திருஞானசம்பந்தர் கால நிர்ணய விளக்கம் | ரூ. | 20.00 |
| 13. | நட்சத்திர பதிகங்கள் | ரூ. | |
| 13. | "தமிழ் வேதநாவலர்" "வைத்தியமணி" சற்குரு. சித.வே. சண்முகநாதபிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு | ரூ. | |




இந்நூலைப் பற்றி....

சமயகுரவர்கள் நால்வரும் ஐம்பூதங்களுக்கும் ஆதியாகிய நாதத்தை வசப்படுத்தி அதன் மூலம் பதிகம் ஆக்கி தந்துள்ளார்கள். பண்ணை ஓத ஓத பண்பாடாகிய பண் பூக்க ஆரம்பிக்கும். அந்தப்பண் பூக்க ஆரம்பித்தால் அதன்மூலம் உண்டாகும் மணம் பெறு மணமாகி எங்கும் பரவி நமக்கும் நம்மைச் சார்ந்தவர்களுக்கும் இனிமையான வாழ்வை வாழ வழிவகுத்து விடும். தொண்டர் நாதனை தூது விடுத்தது பதிகம் தான். முதலை உண்ட பாலனை அழைத்தது பதிகம் தான். எலும்பு பெண் உருவாகக் கண்டது பதிகம் தான். மறைக்கதவினை திறந்ததும் பதிகம் தான். ஆண் பனை பெண் பனையாகி பூத்து காய்த்ததும் பதிகம் தான். முயலகன் நோயை போக்கியது பதிகம் தான். விஷ சுரத்தை நீங்கியது பதிகம் தான். எல்லா அற்புதங்களையும் நாதத்தை பண்ணில் அமைத்து ஐம்பூதத்தையும் இயங்க வைத்தார்கள். அதன் மூலம் நாமும் பண்களின் நுட்பம் அறிந்து பதிகம் ஓதி ஓதி வீடுபேறு அடையலாம். “ஓதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்” என நமக்கு கூறிய அறவுரையை பின்பற்றி வேதத்தை உள்ளடக்கிய பதிகத்தை ஓதி பேரின்ப பெருவாழ்வு வாழ வேண்டும் என எழுதி நிறைவு செய்கின்றோம்.

இவண்

அடியார்க்கு அடியேன்

**இராம. ஆதிரெத்தினம்**